Registered No. M. 1014.



வ

ஸ்ரீ வாணீசகாயம்.

# கலைமகள்.

புதுவைக் கலைமகள் கழகத்தினின்றும் வெளிவரும்

**மாதாந்தப் பத்திரிகை.**

**வித்தைவிரும்பு. கேள்விமுயல்.**
**வீடுபெறநில்.**



| | | |
|---|---|---|
| வெண்டாமரை ௨. | 1914-ம் ஆ செப்டம்பர் மீ | இதழ் ௯. |





பத்திராதிபர்:— **சி. பங்காருப் பத்தர்,**
கல்வே காலேஜ் தமிழ்ப் பண்டிதர்
புதுவை.



| | |
|---|---|
| வருஷ சந்தா ரூ 1 | வெளிநாட்டுக்கு ரூ 2 |
| தபாற்கூலி அணா 4 | தனி சஞ்சிகை அணா 2 |

Saigon Sinnaya Press Pondicherry,

# உள்ளுறை.

பக்கம்.

பாலசிக்ஷை:—ஸ்ரீமதி த. பு. அம்மணியம்மாள் B. I., புதுவை. 195

ரமணி (ஓர் காதற் கதை): — ஸ்ரீமான் சு. அ. சுப்பராயப் பிள்ளை, புதுவை. ... ... ... ... 197

இந்துப் பெண் கல்வியின் முற்கால தற்கால நோக்கங்கள்:— இதோபதேசி. ... ... ... ... ... 201

மந்தமான குழந்தைகளைச் சுறுசுறுப்பாக்குவது (பெண் கல்வி): — ஒரு மாஜி உபாத்யாயினி. ... ... 202

பிரகிருதி சாஸ்திரம்: — பாரதி பக்தன்.... ... ... 204

சீவக சிந்தாமணி: — பத்திராதிபர். ... ... ... 208

சன்மார்க்கம்:—ஸ்ரீமான் பொ. மாணிக்கசெட்டியார், தாதம் பேட்டை பழூர்.... ... ... ... ... 212

குருபக்தி: — ஸ்ரீமான் M. V. சுப்ரமண்ய ஐயர். ... 214

சுஜன சம்வாதம்:—ஸ்ரீமான் ஆ. செங்கல்வராயமுதலியார், காஞ்சீபுரம். ... ... ... ... ... 217

529

உ

ஸ்ரீவாணீசகாயம்.

# கலைமகள்.

புதுவைக் கலைமகள் கழகத்தினின்றும் வெளிவரும்

**மாதாந்தப் பத்திரிகை.**

வித்தைவிரும்பு. கேள்விமுயல். வீடுபேறநில்.

வெண்டாமரை உ. ] 1914-ம் ஆ செப்டம்பர் மீ [ இதழ் கூ.

## இலௌகிகப் பகுதி.

### பாலசிக்ஷை.

7-வது அத்தியாயம்.

3-வது வயது.

( தொடர்ச்சி. )

வாய்மை.

சன்மார்க்கப் பயிற்சிக்கு வாய்மை இன்றியமையாததாகும். வாய்மை யொன்றே மனதைத் தூய்மை செய்ய வல்லது.

ஒருவனிடத்தில் சகல தர்மகுணங்களும் குடிகொண்டிருக்கிற தென்பதற்கு அவன் சத்தியவான் என்று ஒரே மொழியினல் கூறுதலும், மற்றொருவன் சகல துர்க்குணங்களும் உடையவனென்பதற்கு அவன் பொய்யன் என்றலும் உலக வழக்காயிருக்கின்றதன்றோ?

கடவுள் சத்திய சொரூபியென்றும், மெய்யே சிவனென்றும், பொய்மையே பாவமெல்லாம் விளைதரு பூமியென்றும், கதி யிழக்கினுங் கட்டுரை யிழத்தற் பாலதல்லவென்றும், வாய்மையின் மகிமையைத் தமிழ் நூற்களில் எத்துணையோ எவ்வெவ்வாறோ வர்ணித்திருத்தலின், அதன் பெருமையை இங்கு விளக்கப்புகுதல் வியர்த்தமாகும்.

530



பொய்யை வெறுக்கவும் மெய்யை உரைக்கவும் சிற்றிளம் பிராயந்தொட்டே குழந்தைகளைப்பழக்கிவரவேண்டுவது அவசியமென்பதைப் பற்றியும், இப்பயிற்சியில் அநுசரிக்கவேண்டிய சிற்சில விதிகளைப்பற்றியு மாத்திரம் சற்று விசாரிப்பாம்.

குழந்தை எவ்வயதினதாயினும் பேசத் தொடங்கியது முதல் அதன் வாயினின்று பொய்யொன்றும் பிறவாத வண்ணம் கவனித்து வரவேண்டும். சன்மார்க்கப் பயிற்சிக்கு வாய்மை பிரதான அமிசமென்பதை யுணராத சில தாயர்கள், சிறுகுழந்தைகள் பொய்ம்மொழி கூறுதற்கு உளமகிழ்வர். வேறு சிலர், அவர்கள் வாயினின்று வரும் அபத்தங்களை மதலைக் கூற்றென்று புகழ்ந்து ஆநந்திப்பர். மற்றும் சிலர், தாமே குழவிகட்குப் பொய்யுரைக்கக் கற்பித்து இன்புறுவர்.

இத்தகைய துர்ப்பழக்கங்கள் பொய் சொல்லுவதில் ஒவ்வொருவருக்கும் இயல்பாக இருக்கவேண்டிய அருவருப்பை நீக்குதற்கு ஏதுவாகின்றன.

இவ்வயதினின்றே குழந்தைகள் பொய்யை அருவருக்கும்படி செய்வது எத்துணை யவசியம் என்பதற்குப் பின்வரும் சரிதை இலக்காகும்.

பிராஞ்சு தேசத்தில் ஒன்பதாவது லூய் அரசனின் அன்னையாகிய பிளான்ஷ் தெ கஸ்தீய் என்னும் உத்தமி அதி கவனத்துடன் அவரைச் சிசுப் பிராயத்தினின்றே நன்னெறியில் பழக்கிவந்தனள். அவ்வரசனுக்குப் பொய்மையில் எத்துணை அரோசிகம் ஏற்பட்டிருந்ததென்றால், பொய்யென்பதை மனதில் நினைக்கும் அம்மாத்திரத்திலேயே அவருக்குத் தலைவலிக்குமாம். இளமையில் தன்னையு மீறித் தானுரைத்த ஒரு சிறு பொய்யைச் சிந்திக்குந்தோறும் மனமுடைந்து கண்ணீர் சிந்தித் துக்கிப்பாராம்.

பொய் சொல்லா வண்ணம் குழந்தைகளைத் தடுத்துவருதல் மாத்திரம் போதியதன்று. அவர்கள் முன்னர்ப் பெற்றோரு மற்றோரும் அபத்தமொன்றும் கூறாதிருத்தலும் வேண்டும். தம்மை மாத்திரம் பொய்யுரையாதபடி பெற்றோர்கள் தடுப்பதையும் அவர்களே சாதாரணமாய் அக்குற்றத்தில் விழுதலையும் கண்கூடாக அறியும் சிறுவர்கள் எவ்வாறு சத்தியத்தில் பழகுவர்?

சாதாரணமாய் நம்மவர்கள் குழந்தைகள் செய்யும் தொந்தரவுகளை ஏதேனும் பொய் சொல்லிச் சாந்தப்படுத்துவர். இது ஓர் கெட்ட உபாயம்.

531



இதனல் குழந்தைகளையும் பொய் சொல்ல நிதர்சனமாகப் பழக்குவதன்றி நம் வார்த்தையில் அவர்களுக் கிருக்கவேண்டிய நம்பிக்கையும் இழந்து விடுகிறோம்.

நம்மிடமிருந்து ஒன்றுபெறுதல் அல்லது தாம் செய்த பிழையை மறைத்தல் ஆகிய இவ்விரண்டுமே குழந்தைகள் பொய் சொல்வதற்கு முக்கிய காரணங்கள்.

பொய் சொல்லி ஒன்றும் பெறமுடியாது, அதனல் கிடைக்கக் கூடியதும் போய்விடுமென்ற உறுதியை நன்கு உணருமாறு செய்துவரல் வேண்டும்.

( வரும். )

த. பு. அம்மணியம்மாள்.

---

# ரமணி.

## ஓர் காதற் கதை.

( தொடர்ச்சி. )

புதிதாய் வந்தவர்கள் யாவர்? சரஸ்வதிதாச சுவாமி, ஜனர்த்தனன், போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருவர், இரண்டு போலீஸ் சேவகர்கள் ஆகிய ஐவரே. தம் மந்திரத்தடியால் பூமியை ஒரு இடி இடித்து, ஒரு மூலையிலிருந்த வாத்யக்காரர்களை நோக்கி, "நிறுத்து வாத்யத்தை" எனக் கழறினர் சுவாமி. உடனே வாத்ய முழக்கம் நின்றது. ஆண்டிருந்தாரிற் பலரது குரலெலாங் கலந்த கலகலவென்ற ஒரு ஏக தொனிதான் எங்கும் முழங்கினது. இத்தொனிக்கு மேலாகச் சந்யாசியின் குரல் "எங்கே விஜயரங்கதாச மகாப்பிரபு? அதற்குள் ஓடிப்போய்விட்டாரா என்ன!" என்று மணி அடித்தாற்போல் ஒலித்தது. இக் குரலைக் கேட்டதும் விஜயரங்கதாசர் மணக்கோலத்துடன் தன் மகன் கண்ணையன், தன் பெரிய கணக்கர் பட்டாபிராம், தன் புத்திரி சந்திர தூர்க்கத்தின் கணவன் ஆகிய மூவர் சகிதம் சுவாமி முன்பு விஜயஞ்செய்தனர். சந்திர தூர்க்கத்தின் கணவரைத் தவிர மற்ற மூவர்கள் ஒவ்வொருவருக்கும் என்னவோ ஒவ்வொரு கடிதத்தைக் கொடுத்து "நல்லவேளை தாலிகட்டுவதற்கு முன்னமே வந்துவிட்டேன்" என்று ஆங்கிலத்தில் சொன்னர் போலீஸ் இன்ஸ்பெக்டர். உடனே மூவர் முகத்திலும் மூத்தாள் பிரகாசித்தாள்.

532



இச் சமயம் விஜயரங்கதாசாது எதிர்கால மாமனர் சடகோபரும் தன் புத்திரி யறையிலிருந்து வந்துவிட்டார். சரஸ்வதிதாசத் துறவி "விஜய ரங்க மகாப்பிரபு! இந்த அற்ப விஷயத்திற்கு நீர் இப்படிக் கலங்குகிறீரே. அந்தச் சமயத்தில் ரமணியம்மாள் எப்படிக் கலங்கியிருப்பாள்? சரி, நீர் உமது சீடர்களுடன் போய்வாரும். உமக்கு மங்களம் பொங்கிடுக. சுரங்க விஷயமொன்றிருக்கிறது ஞாபகமிருக்கட்டும்" என்று சிரித்துக் கொண்டே சொன்னர். சற்றுநேரத்தில் விஜயரங்கர், கண்ணையன், பட்டாபிராம், போலீஸ் இன்ஸ்பெக்டர், இரு சேவகர்கள் ஆகிய அறு வரும் வெளியே தெருவிற் காத்திருந்த வண்டியிலேறி மணவீட்டைவிட் டகன்றார்கள். எங்கே? அவ்விடத்தை நமது கதாநேயர்களே ஊகித் தறிந்துகொள்ளலாம்.

மணமகன் வெளியே சென்றதும் சரஸ்வதிதாசர் ஜனர்த்தனனை நோக்கி "நீ அதோ இருக்கிற மணையிலுட்கார்" என்று ஒரு குழந்தைக் குத் தந்தை கட்டளையிடுவதுபோல் கழறி விவாக மணையைச் சுட்டிக் காட்டினர். ஜனர்த்தனன் பிரமித்துவிட்டான். "என்ன, நானு!" என்று மேலொன்றுஞ் சொல்லாமல் தயங்கினன். "ஆமாம் ஜனர்த்தன! நீதான். நீதான் இப்போது கலியாண மாப்பிள்ளை. வெட்கப்படாதே. உட்கார் வா. என் சொல்லைத் தட்டாதே" என்று சுவாமி அவன் கரத் தைப்பற்றி அழைத்தார். ஜனர்த்தனன் அவர் பற்றிய கையைத் திமிறிக் கொண்டே "வேண்டாம், வேண்டாம் சுவாமி. அவரை ஜெயிலுக்கனுப்ப நான் காரணமாயிருந்துவிட்டு நான் இப்பொழுது இதற்குச் சம்மதிக்க மாட்டேன். என்னை அவ்வளவு இழிந்தவனுக எண்ணிவிடாதேயுங்கள். என் உயிர் போனலும் நான் இதற்குச் சம்மதிக்கமாட்டேன்" என ஆத் திரத்தோடு சொன்னன். சுவாமியோ அவன் பேசுவதைக் கவனியாது அவன் கையை இறுகப்பற்றித் தன் தேக பலத்தினல் அவனை இழுத்துக் கொண்டே விவாக மணையருகே சென்ருர். அப்பொழுது சடகோபர் வந்து பெருஞ் சினத்தோடு முகஞ் சிவக்க, "என் வீட்டைவிட்டு இந்த க்ஷணமே நீங்களிருவரும் வெளியே போகவேண்டும். இனி இங்கே உங்களுக்கு என்னவேலை" என்றனர். சுவாமி "கோபித்துக்கொள்ளாதே யுங்கள். எனக்கு இங்கே இன்னும் கொஞ்சம் வேலையிருக்கிறது. என்ன வேலையென்ருல், சொல்லுகிறேன் கேளுங்கள். ஜெயிலுக்குப் போ யிருக்கும் விஜயரங்கதாச ரிடமிருந்து உங்கள் பெண்ணைக் காப்பாற்றி னேன். இனி அந்தப் பெண்ணுக்குத் தகுந்த மாப்பிள்ளையாகிய இந்த ஜனர்த்தனருக்கு அவளை மணஞ் செய்விக்கப்போகிறேன்" என்று சற் றேனும் அச்சமின்றி அமைதியாய்க் கூறினர். "பெண்ணுக்குரியவன்

நான், அவர் ஜெயிலுக்குப்போனுலும் ஜெயிலிலிருந்து வந்தவுடன் நான் கலியாணத்தை முடித்துக்கொள்வேன். நீங்கள் வெளியே போகலாம். போகாவிட்டால் மரியாதை இழந்துவிடுவீர்கள்'' என்ருர் சடகோபர். “சடகோபரே! நான் முற்றத் துறந்த சந்யாசி. உலக நன்மையைக் கருதுபவனே யொழிய என் சொந்த நன்மையைக் கருதுபவனல்லன். உங்களுக்கு ஒரு பெரிய நன்மையைச் செய்யவே ஈசுவரி என்னை அனுப்பி யிருக்கிருள். ஆகையால் நீங்கள் அடித்துத் துரத்திஞலும் நான் போக மாட்டேன். என்னேடு சற்று இப்படி வாருங்கள். எலலா ரகஸ்யங் களையும் சொல்லுகிறேன்'' என்று ஜஞர்த்தனன் கரத்தை விட்டுச் சட கோபர் கரத்தைப் பற்றினுர் சுவாமி. இதுதான் தக்க சமயமென்று ஜஞர்த்தனன் உடனே தெருப்புறத்து வாயிலை நோக்கிச் சரசரவெனப் போனுன். “உன்மீதும், உன் சுவாமியின்மீதும், உன் ரமணியின்மீதும், உன் சாவித்திரியின்மீதும், சரஸ்வதி தேவிமீதும் ஆணையிட்டுச் சொல்லு கின்றேன். என் உத்தரவின்றி இந்த இடத்தை விட்டுப் போகாதே'' என்று கர்ஜித்தனர் சுவாமி. ஆகையால் ஜஞர்த்தனன் குழப்பமுற்ற மனத்துடன் செல்லாது நின்றுவிட்டான். பின்பு சுவாமி சடகோபர் கையைப் பற்றியவாறே அவரை அழைத்துக்கொண்டு மணப்பெண் ணிருந்த அறைக்குள் நுழைந்து அங்கேயிருந்த ஸ்திரீகளை நோக்கி “தாய் மார்களே! ருக்மணியம்மாளைத் தவிர எல்லோரும் சற்று வெளியே போகவேண்டும்'' என்றனர். அவ்வாறே நங்கையர்கள் அறையைவிட் டகன்ருர்கள். ருக்மணியம்மாளும் சாவித்திரியும் மாத்திரம் போகாமல் எழுந்து நின்ருர்கள். சுவாமி சடகோபர் முகத்தைப் பார்த்து “நீங்கள் உங்கள் பெண்ணை வக்கீல் ஜஞர்த்தனருக்குக் கொடுக்க என்ன ஆக்ஷே பனை'' என்றனர். இம்மொழிகளைக் கேட்டாள் சாவித்திரி. ஆ! அப் பொழுது அவள் நெஞ்சம் உற்ற கிளர்ச்சியை எவ்வாறு வர்ணிப்பது! ஒரு அற்புத பரவசத்தி லாழ்ந்தாள். தன்னை மறந்த ஒரு மயக்கமுற்ருள். அந்த மயக்கத்தில் அவளால் பூமியில் நிற்க இயலவில்லை. தன் அன்னை யின்மீது சாய்ந்து அவளைத் தழுவிக்கொண்டாள். ருக்மணியம்மாளும் தன்மீது சாய்ந்த மயிலை அன்போடு அணைத்துத் தாங்கி நின்ருள். காதற் பாசத்தாலும், கரங்களின் பாசத்தாலும் கட்டுப்பட்டு நின்ற அந்த இரண்டு சௌந்தரியவதிகளின் நிலைமை, அழியாப் புகழுடம்பைப் பெற்ற ரவி வர்மன் என்ற சித்திரச் சித்திரன் சித்திரித்த “சகுந்தலையும் மேனகையும் தேவலோகம்போதல்''. என்ற படத்தின் காட்சியையே ஒத்திருந்தது. இக்காட்சி இவ்வாறிருக்கட்டும். சரஸ்வதிதாச சடகோப சண்டையைக் கவனிப்போம்.

S34



"நான் விஜயரங்கதாசருக்குத்தான் கொடுப்பேனென்று அப்பொழுதே சொன்னேனே" என்றார் சடகோபர்.

"அவர்தான் ஜெயிலிலிருக்கிறாரே. அவர் தண்டனையடைவதும் நிச்சயம்" என்றார் சுவாமி.

"அவர் தண்டனையடைந்தாலும் அவர் விடுதலையான பிறகு நான் கலியாணத்தை முடிப்பேன்."

"கடைசியாய் நான் ரகஸ்யத்தைச் சொல்லிவிடுகிறேன். சற்று நேரத்தில் பட்டப்பகலாக உலகமெங்கும் பரவிவிடும் விஷயத்தை நான் ஏன் ஒளிக்கவேண்டும்! கேளுங்கள். விஜயரங்கதாசர் என்ன குற்றத்திற்காக ஜெயிலுக்குப் போயிருக்கிறாரென்று அறியாமல் பேசுகிறீர்கள். ஜனார்த்தனரது அத்தை பெண் ரமணியம்மாளை அவர் திருடிச் சிறை வைத்து அந்த அம்மாள் அவர் துர் எண்ணத்திற் கிணங்காததால் அவளைக் **கொலைசெய்துவிட்டார்.** அந்தக் கொலைக் குற்றத்திற்காக——"

கொலைசெய்துவிட்டார் என்ற மொழியைக் கேட்டவுடன் சாவித்திரி "ஐயோ ஒ! ரமணீ இ! ரமணீ இ!" என்று கிளியின் தொனியை நிகர்த்த ஒரு கீச்சிட்ட சோகமயமான குரலால் சடகோபர், சந்யாசி, ருக்மணியம்மாள் ஆகிய மூவர் நெஞ்சங்களையும் துளைக்கும்படியாகத் தொனித்து பயங்கரமாக எக்கமுற்றுக் கீழே வீழ்ந்தனள். சோகமயமான அந்தப் பெண் குரல் முற்றத் துறந்த தீர சந்யாசியாகிய சரஸ்வதிதாச சுவாமியின் கண்களிலும் நீர்பொங்கச் செய்தது. அவர் கண்ணாடியணிந்திருந்ததால் அருகேயிருந்தார் அவர் கண்ணீரைக் காணவில்லை. சுவாமியின் இதழ்களும் சற்றுப் பதைத்தன. அவரும், சடகோபரும் சட்டெனச் சாவித்திரி யருகே வந்தனர். ருக்மணியம்மாள் தன் புத்திரியின் சிரத்தைத் தன் மடிமீ தமர்த்தி "என்னம்மா? சாவித்திரீ! சாவித்திரீ! உனக்கென்னம்மா? —" என்றவாறு அன்பு சுரந்த பல இனிய நயமொழிகளை இயம்பினாள். சாவித்திரியும் சற்றுநேரத்தில் கண்விழித்தாள். தன் முகத்தைத் தன் கரங்களால் மறைத்துக்கொண்டாள். ஏங்கி ஏங்கி யழலாயினள். சந்யாசியும் இதற்குள் தன் மன வைராக்கியத்தின் வல்லமையால் கண்களிற் பொங்கிய நீர் கன்னத்தில் வழியாது அதை மீண்டும் கண்களுக்குள்ளேயே செலுத்தி அதரங்களின் பதறுதலையும் அடக்கிவிட்டு அமைதியாகச் சடகோபருக்கு உபதேசிக்கலாயினர்.

(தொடரும்.)

**சு. அ. சுப்பராயப்பிள்ளை.**

535



# இந்துப் பெண் கல்வியின் முற்கால தற்கால நோக்கங்கள்.

ஆரியமணிகாள்!

நாம் நமது பெண்மணிகளின் அறிவு வளர்ச்சியைப்பற்றிக் கவனிக்கவேண்டிய ஆவசிக மிப்போது நேர்ந்திருக்கின்றதென்பது நம்மில் அறிஞர் பலருடைய மனதில் வேரூன்றி வருதலானது நம் பெண்மணிகளின் நன்மைக்கு இன்றியமையாத தொன்றேயாம்.

ஆயினும் நம் பெண்களின் அறிவு வளர்ச்சியானது இன்ன தன்மை உடைத்தா யிருக்கவேண்டுமென்பதைப்பற்றி நம் அறிஞர் பலரது அபிப்பிராயமும் ஒன்றுபட்டிருப்பதாக மாத்திரம் தெரியவில்லை.

சிலர் நம் பூர்வீகர் பெண்களுக்கு எந்த வைதீக அறிவை அபிவிர்த்தி செய்துவைத்தனரோ, அதனையே நம் ஸ்திரீரத்தினங்கட்கு வளர்விக்கவேண்டுமேயன்றி மேலைத்தேசத்துப் பெண்களைப்போன்று புருடர்களோடு போட்டிப்போட வல்ல குணபிவிர்த்திக்குரிய இலௌகிக அறிவை வளர்விப்பது கூடாதென்றும், அவ்வைதீக அறிவும் பிதா, பர்த்தா, மற்றுமுள்ள குடும்பப் பெரியோர் இவர்களால் வளர்க்கப்படல் வேண்டுமே யன்றி அன்னியர்களைக்கொண்டு அது செய்தல் கூடாதென்றும், ருது மதியான பெண்கள் அல்லது அப்பருவத்தைச் சமீபித்துள்ள பெண்கள் பிறரிடஞ்சென்று கல்விகற்பது அனர்த்த ஹேதுவாமென்றும், அவசியமாயின் ஒன்பது வயதுவரையில் பெண்களுக்காக அமைக்கப்பட்ட கல்விக்கழகத்திற்குப் பெண்களை யனுப்பிக் கல்வி கற்பிக்கலாமென்றும், ஒவ்வொரு குடும்பப் பெரியாரும் தினந்தோறும் ஒருகாலத்தை நியமித்துக்கொண்டு வயதில் சிறியோரும் பெரியோருமாகிய தம் குடும்ப ஸ்திரீகட்கும் மற்றுமுள்ள பாலர்களுக்கும், சுருதியாதிகட்கு முரணின்றிச் சற்போதனை செய்துவரல்வேண்டுமென்றும், எதைப் பெரியோர் அனுஷ்டிப்பரோ அதையே மற்றோரும் பின் செல்வாரானதாலும், புத்தகப் படிப்பிலும் நம்மைச் சூழ்ந்திருப்பவரது நடையே நம்மைப் படிப்பிப்பதில் பலமுடையதானதாலும், மேற்சொன்னபடி தம் குடும்ப ஜனங்கட்குச் சற்போதனை செய்துவரும் குடும்பப் பெரியார் தாம் எப்படிப் போதிக்கின்றனரோ அப்படியே தம் ஒழுக்கத்தையும் சீர்ப்படுத்தி வைத்துக்கொண்டிருக்கவேண்டுமென்றும், முற்காலத்தும் பெண்கள் படித்திருந்தார்கள் என்பதற்குச் சான்றாக நம்மவர் பலரால் எடுத்துக்காட்டப்பட்ட மைத்திரேயி முதலிய ஸ்திரீகள் இம்முறையே வைதீக ஞானத்தைப் பெற்றுப் பரலோக வாழ்வை யடைந்தார்களென்றும் கூறுகின்றனர்.

536



இதனுல் முற்காலத்துப் பெண் கல்வியானது பரலோக இன்பம் ஒன்றனையே முக்கிய நோக்கமாகக்கொண்டிருந்ததென விளங்குகின்றது.

வேறு சிலர் மேற்கூறியவற்றிற்கு முற்றும் மாருக நம் பெண்கள் ஏன் நம்மைப்போல் சுதந்தரமாக வெளியே சென்று ஸ்திரீ புருடர்களாகிய பல ஜனங்களோடும் கலந்து பழகக்கூடாதென்றும், அங்ஙனம் பழகாவிடின் அங்ஙனம் பழகாத புருடர்கள் எங்ஙனம் அறிவில் குறைந்து மங்கிக்கிடக்கின்ருர்களோ, அங்ஙனமே பெண்களும் அறிவு மங்கி நன்மையடைய ஹேதுவின்றிப் போவார்கள் என்றும், அரசாங்க உத்தியோகசாலையில் அமர்ந்து ஏன் அதிகார ஸ்தானங்களை நம் பெண்கள் வகிக்கக்கூடாதென்றும், அந்த ஸ்தானங்களைப் பெறவேண்டி ஏன் உயர்தரக் கல்விச்சாலையில் சென்று கல்வி கற்கக்கூடாதென்றும், ஐரோப்பா முதலிய தேசாசாரப்படி பொது ஸ்தலங்களில் புருடர்களோடு சமமாய் ஆசனத்திருத்தல், புனர்விவாகம் செய்துகொள்ளல் முதலிய ஆசாரங்களை ஏன் நம் ஸ்திரீகள் ஆசரிக்கக்கூடாதென்றும் இன்னும் இத்தகைய பல கேள்வியாதிகளால் ஜன சமூகத்தைப் பிரமிக்கச்செய்து தம் நவநாகரிகாபி மதத்தைப் பரவச்செய்து வருகின்றனர். இதுவே தற்காலப் பெண் கல்வியின் முழு நோக்கமாகவிருக்கின்றது. இந் நோக்கத்தால் உலக வின்பம் ஒருவாறு கைகூடுமோப்போலத் தோன்றினும் ஆராயின் துன்பமேயாகும். இதற்கு மேலைத் தேசத்தில் ஸ்திரீ சுதந்தரவாதிகள் தற்போது செய்துவரும் கலகங்களே சான்ரும்.

ஆகலின் நம் பெண்மணிகள் இடைப்பட்ட சில காலங்களால் இழந்த கல்வி யறிவை முதற்கண் கூறப்பட்ட அறிஞாது கொள்கையை அனுசரித்து வளர்த்துவருவோமாயின் நம் பெண்மணிகள் முக்கியமான பரலோக வின்பத்தைப் பெறுவதுமன்றி இம்மை யின்பத்தையும் புகழையும் அவாந்தரப் பயனுகப் பெற்று வாழ்தற்கு உரியவராவார். சுபம்.

**இதோபதேசி.**

---

## மந்தமான குழந்தைகளைச் சுறுசுறுப்பாக்குவது.
## (பெண் கல்வி.)

---

நமது பால்கா பாடசாலைகளில் பிரதி வகுப்பிலும் மந்த புத்தியுள்ள குழந்தைகள் ஏறக்குறையச் சரிபாதி யிருக்கிருர்கள். சாதாரண தீவிர புத்தியுள்ள குழந்தைகள் கால்பங்கும், நல்ல புத்திசாலியான குழந்

தைகள் கால்பங்கும் இருக்கிறார்கள். உபாத்யாயினி பாடங்களைச் சொல்லிக்கொடுக்கும்பொழுது இந்த மந்த புத்தியுள்ள குழந்தைகள் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருக்குமேயன்றி அவர்களுடைய ஞாபகம் வெளியே உலாவிக்கொண்டுதானிருக்கும். ஒரு பாடத்தைப் பலமுறை சொல்லிக் கொடுத்துக் கேட்டாலும் இந்த மந்த புத்தியுள்ள குழந்தைகள் விரும்பார்கள். அப்போது உபாத்யாயினிக்குக் கோபம் வரும். சில சமயம் குழந்தைகளை அடிக்க நேரிடும். பாடம் தெரியவில்லையே யென்று அடித்தால் குழந்தைகள் மிகவும் மந்தமாகிவிடும். குழந்தைகளை அடிக்கக் கூடாது. பெற்றோர்கள் குழந்தைகளை உபாத்யாயினியினடைக்கலம் விட்டிருப்பது அவர்களை நல்ல வழியில் திருப்பி மேலான நெறியைப் போதிக்கிறதற்காகவே யன்றி வேறல்ல. "குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்" என்பதுபோல், குழந்தைகளுக்கு அன்புடன் கற்றுக்கொடுக்கவேண்டும். இன்று மந்தமான குழந்தைகள் நாளை புத்தி சாலியாகிவிடும். பள்ளிக்கூடத்தில் மிகவும் மந்தமாயிருந்த குழந்தைகள் பிற்கால வாழ்க்கையில் நல்ல பதவியைப் பெற்று வந்திருக்கிறார்களென்பது தெரிந்த விஷயம். ஒரு குழந்தையை மந்தமாகச் செய்வதும், புத்தி சாலியாகச் செய்வதும் உபாத்யாயரிடம் இருக்கிறது. சில உபாத்யாயர்கள் தங்கள் கஷ்டத்தைக் கவனித்து இந்த மந்த புத்தியுள்ள குழந்தைகளைக் கேள்விகள் கேட்காமலும் அதிகமாகக் கவனிக்காமலுமிருக்க நேரிடும். ஒரு வகுப்பில் புத்திசாலிக் குழந்தைகளை மாத்திரம் கவனித்து விட்டுத் தாங்கள் அதிக சிரமத்துக்கு ஆளாகாமலிருக்க எண்ணமுமுண்டாகும்.

கீழ்க்கண்டவைகள் மந்த புத்தியுள்ள குழந்தைகளைச் சுறுசுறுப்பாக்குவதற்கு அநுகூலமாயிருக்குமென்று நம்பி என் அனுபவத்தை இந்த அருமைப் பத்திரிகை மூலமாகத் தெரியப்படுத்துகிறேன்.

உபாத்யாயர் ஒரு வகுப்பில் தாம் சொல்லிக்கொடுத்துவரும் போதனை முறையை இந்த மந்த புத்தியுள்ள குழந்தைகளின் மூளையின் வலிமைக்குத் தகுந்தபடி அமைத்துக்கொள்ளவேண்டும். மந்த புத்தியுள்ளவர்கள் வகுப்பில் தூங்காதபடியும் அவர்கள் மனம் வேறு இடம் நாடாமலிருக்கும்படியும் அவர்களை அடிக்கடித் தூண்டவேண்டும். கரும்பலகையில் (போர்டில்) அவர்களை யெழுதச் சொல்லலாம். புத்திசாலியாயுள்ள குழந்தைகளின் பக்கத்தில் மந்தமான குழந்தைகளை உட்காரவைக்கலாம். ஒரு வகுப்பு மிகவும் சோம்பலாயிருந்தால் உடனே தேகப் பயிற்சிசெய்ய அழைத்துப்போகவேண்டும். அல்லது கெட்டிக்காரக் குழந்தைகளைப் பாடத்தைப் பார்த்துப் படிக்கச் சொல்லவேண்டும். மந்தமான குழந்தை

களை அதுமாதிரியாகவே உரத்திப் படிக்கச் சொல்லவேண்டும். மந்தமான குழந்தைகளைக் கேள்விகள் கேட்கும்போது உட்காரவைத்துக் கேட்பது நலம். மனக் கணக்குப் போடவேண்டும். அதன் சரியான விடையை விரைவாயோடிக் கரும்பலகையில் போர்டில்) முதல் எழுதுகிற குழந்தைக்கு வெகுமதி கொடுத்து உற்சாகப்படுத்தவேண்டும். இப்படியாகப் பலமுறைகளினால் மந்தமான குழந்தைகள் சுறுசுறுப்பாகி வந்திருக்கிறார்கள். இது என் அனுபவம். குழந்தைகளை அன்பு என்கிற கயிற்றினால் கட்டி அவர்களுக்குப் போதித்துவந்தால் உபாத்யாயர்களின் சிரமம் வெகுதூரம் நீங்கும். குழந்தைகளும் சுறுசுறுப்புடன் படித்து வருவார்கள். பள்ளிக்கூடத்துக்கு வரும்போது குழந்தைகள் சந்தோஷமாக வந்து உபாத்யாயரைக் காண்பார்கள். பள்ளிக்கூடம் விட்டுப் போகும்போதும் குதூகலமாக வீட்டுக்குப்போக இடமுண்டாகும்.

மந்த புத்தியுள்ள குழந்தைகள் மேற்கண்ட அனுபவ முறைகளினால் சுறுசுறுப்பை அடையாமலிருந்தாலாவது அல்லது மந்தத்தனத்தை அதிகமாக அடைந்தாலாவது உபாத்யாயர்கள் மௌனமாக இருக்கக் கூடாது. உடனே இவ்விஷயத்தைப் பெற்றோர்களுக்குத் தெரியப்படுத்தி வைத்தியரை (டாக்டரை)க் கொண்டு குழந்தையின் மூளையைப் பரீக்ஷை செய்யவேண்டும். தெரியாத பெற்றோர்களுக்குப் பள்ளிக்கூடத்துத் தலைமை யதிகாரி எடுத்துச் சொல்லவேண்டும். குழந்தையின் மூளைக் கோளாறுகளை நிபுண வைத்தியர் (டாக்டர்)களால் அறிய முடியுமே யன்றிச் சாமானியர்களால் அறியமுடியாத காரியம். மேல்நாடுகளில் மிகவும் மந்தமான குழந்தைகள் வைத்தியர் (டாக்டர்)களால் பரீக்ஷிக்கப்பட்டதற்குப் பிறகு, சுறுசுறுப்புள்ளவர்களாகியும் நல்ல புத்திசாலிகளாகியும் இருக்கிறார்கள். பிரதி பாடசாலையை யொட்டி வைத்தியர் (டாக்டர்)கள் இருப்பது அவசியம். சாதாரணமாக ஏழைப் பெற்றோர்கள் வைத்தியர் (டாக்டர்)களுக்குப் பணங் கொடுத்துக் குழந்தையைப் பரீக்ஷிக்க முடியாதாகையால் பள்ளிக்கூட அதிகாரிகள் நிபுண வைத்யர் (டாக்டர்)களை வைத்துக்கொள்வது நலமாகும்.

ஒரு மாஜி உபாத்யாயினி.

---

## பிரகிருதி சாஸ்திரம்

### முதற்பாடம்:

**வஸ்துக்களின் மூவகை ஸ்திதி.**— ஐந்து புலன்களால் அறியப்படுவன வஸ்துக்கள் என்று சொன்னோம். இனி வஸ்துக்களில் எத்தனை

பேதங்களிருக்கின்றன என்ருராய்வோம். அநேக பேதங்கள் நமக்குத் தோற்றுகின்றன. புஷ்பம், நாற்காலி, கல், ஜலம், வாயு இவைகளும், மற்ற வஸ்துக்களும் வெவ்வேறு வஸ்துக்களாக நமக்குத் தோற்றுகின் றன. வெவ்வேறு வஸ்துக்களாகத் தோற்றும் ஒவ்வொரு வஸ்துவும் தனித்தனி வஸ்துதாஞ, அல்லது ஒரு வஸ்து பல பேதப்பட்டுத் தோற்றக் கூடியதாக ஆக்கப்பட்டிருக்கிறதா, அவ்வாருயின் எந்தெந்தப் பேதங்கள் ஒரு வஸ்துவாகும் என்றவாறு ஆராய்தல் ரசாயன சாஸ்திரத்தைச் சார்ந் தது. ஆஞல் பிரகிருதி சாஸ்திரத்தில் வஸ்துக்கள் இருக்கும் ஸ்திதி யைக் குறித்துத்தான் அவைகளைப் பகுக்கவேண்டும். ரசாயன சாஸ்தி ரத்தில் வஸ்துக்களைப் பகுக்கும் விதத்தையும் பிரகிருதி சாஸ்திரத்தில் வஸ்துக்களைப் பகுக்கும் விதத்தையும் நமது நேயர்கள் தெளிவாய் அறிந்து கொள்ளவேண்டும். வைரக்கல்லும் அடுப்புக்கரியும் ஒரே வஸ்து என்று ரசாயன சாஸ்திரம் சாதிக்கிறது. ஆஞல் வைரம் மிக உறுதியுள்ளதாக வும் காந்தி வீசுவதாகவும் இருக்கிறது. அடுப்புக்கரியோ மிகச் சுலபமாய் நொறுங்கக்கூடியதாகவும் கன்னங்கரேலென்றும் இருக்கிறது. ஆகை யால் வைரமும் அடுப்புக்கரியும் அவையிருக்கும் ஸ்திதியில் மிகப் பேதப் பட்டிருக்கின்றன. வைரத்தைப்போற் செய்யப்படும் போலி வைரங்க ளாகிய கண்ணுடிக் கற்கள், வைரத்தைப்போல் உறுதி வாய்ந்திராவிட்டா லும், அவை யிருக்கும் காந்திவீசும் ஸ்திதியில் வைரத்தை ஒத்திருக்கின் றன. ஆஞல் ஆக்கத்தில் வைரமும் போலிவைரமும் பேதப்பட்டவைஎன்று ரசாயன சாஸ்திரத்தால் அறியக்கூடும். ஆகையால் வஸ்துக்களிருக்கும் ஸ்திதியை முன்னிட்ட பேதங்களை ஆராய்வதே இந்நூலுக் கியைந்தது. அவ்வாறு சற்ருலோசித்தாலும் அநேக பேதங்க ளிருப்பதாக நமக்குத் தெரிகிறது. கடின வஸ்துக்கள், பிரகாச வஸ்துக்கள், கரிய வஸ்துக்கள், மிருதுவான வஸ்துக்கள், வெண்ணிறமான வஸ்துக்கள், சூடான வஸ் துக்கள் என்றவாறு அநேக பேதங்கள் நமக்குத் தோற்றுகின்றன. ஆயினும் வஸ்துக்களெல்லாவற்றையும், அவை யிருக்கும் ஸ்திதியிலும், அவைகளது லக்ஷணங்களிலும் மிக வேறுபட்ட மூன்று முக்கிய பேதங்க ளாகப் பிரகிருதி சாஸ்திரம் வகுத்திருக்கிறது. அவையாவன: — (1) திட வஸ்துக்கள் (2) திரவ வஸ்துக்கள் (3) வாயு வஸ்துக்கள். திட வஸ்துக்கள் புஷ்பம், காகிதம், சாவி, கற்கண்டு, நாற்காலி முதலி யன. திரவ வஸ்துக்கள் ஜலம், பால், எண்ணெய், தேன், கள் முதலி யன. வாயு வஸ்துக்கள். நம்மைச் சுற்றியுள்ள சாதாரண வாயு, நீராவி முதலியன. இம்மூவகைப் பேதங்களில் திட திரவ வஸ்துக்களின் பேதம் ஒவ்வொருவருக்கும் தெளிவாய்த் தெரியக்கூடியதே. வாயு வஸ்துக்

S40



களைப்பற்றி மாத்திரம் ஈங்கு இன்னுஞ் சில வார்த்தைகள் சொல்வோம். நாம் சாதாரணமாய் அறியக்கூடிய வாயு வஸ்து நம்மைச் சுற்றியிருக்கும் சாதாரண வாயுதான். ஆனால் வேறு வாயு வஸ்துக்களும் உள. பெரும்பான்மை வாயு வஸ்துக்களைக் கண்ணுற் காணவியலாது. எண்ணெய் (எள், நெய்) என்ற மொழி எள்ளிலிருந்து பிழியப்படும் நெய் என்ற அர்த்தமுடையதாயினும் எள்ளிலிருந்து பிழியப்படும் வஸ்துவுக்கு நல்லெண்ணெய் என்ற சிறப்புப் பெயரும் அதற்கும் அதைப்போன்ற எல்லா நெய்களுக்கும் எண்ணெய் என்ற பொதுப் பெயரும் வழங்கப்படுவது போல, நம்மைச் சுற்றியுள்ள வஸ்துவிற்குச் சாதாரண வாயு என்ற சிறப்புப் பெயரும் அதற்கும் அதைப்போன்ற வஸ்துக்களெல்லாவற்றிற்கும் வாயு என்ற பொதுப் பெயரும் இந்த நூலில் வழங்கப்பெறும்.

லக்ஷணங்கள்: — லக்ஷணங்கள் என்ற மொழியை இனி அடிக்கடி உபயோகிப்போம். ஆகையால் அதை என்ன அர்த்தத்தில் உபயோகிக்கிறோமென்று விளக்கவேண்டியது ஆவசியகம். சாந்தம், அடக்கம், கற்பு முதலியவை உத்தம மாதர்களுக்கு லக்ஷணம். இனிய நாதம் நல்ல வீணையின் லக்ஷணம். காமம், கவருடல், கள்ளுண்டல், வஞ்சித்தல் முதலியவை தீய புருஷர்களது லக்ஷணம். இனிமையான குரல் குயிலின் லக்ஷணம். அதிகாலையில் கூவுவது சேவலின் லக்ஷணம். நாற்றம் புஷ்பத்தின் லக்ஷணம். நாலுகாலிருப்பது நாற்காலிக்கு லக்ஷணம். கருமை நிறம் காகத்திற்கு லக்ஷணம். ஒளி தீபத்தின் லக்ஷணம். ஆகையால் லக்ஷணமென்பதென்ன? உத்தம ஸ்திரீகளெல்லோருக்கும், நல்ல வீணையெல்லாவற்றிற்கும், தீய புருஷரெல்லோர்க்கும், எல்லாக் குயில்களுக்கும், எல்லாச் சேவல்களுக்கும், எல்லாப் புஷ்பங்களுக்கும், எல்லா நாற்காலிகளுக்கும், எல்லாக் காகங்களுக்கும், எல்லாத் தீபங்களுக்கும் விசேஷமா யமைந்துள்ள **தன்மைகள்** அல்லது அவைகளால் நிகழும் **காரியங்களே** அவைகளது லக்ஷணங்கள் என்னப்பட்டன. தன்மைகள் அல்லது காரியங்கள் என்றதனால் இரண்டும் ஒன்றாகுமா என்று சிலர் ஐயமுறலாம். சற்றுக் கூர்ந்து யோசித்தால் இரண்டும் ஒன்றே என்பது புலப்படும். இனிமையாகப் பாடுவது குயிலின் தன்மை என்றால் என்ன? இனிமையாகப் பாடுவது குயிலினிடம் நிகழும் **காரியம்** என்றால் என்ன? அவ்வாறே நாலுகாலிருப்பது நாற்காலியின் தன்மை அல்லது நாற்காலியில் நிகழ் காரியம். ஆகையால் **குறிப்பிட்ட ஒரு வஸ்து அல்லது வர்க்கத்தின் தன்மைகள், அல்லது அதனிடம் நிகழ் காரியங்கள், இவைகள் தாம் அந்த வஸ்து அல்லது வர்க்கத்தின் லக்ஷணங்கள் என்னப்படும்.**

S41



வஸ்துக்களின் சில பொது லக்ஷணங்கள்:—வஸ்துக்களெல்லா வற்றிற்கும் பொதுவான சில லக்ஷணங்களைக் கூறுவோம்.

1. வஸ்துக்கள் இடங்கொள்ளுகின்றன:—ஒவ்வொரு வஸ்துவும் இடத்தை அடைத்துக்கொண்டிருக்கின்றது. இடமில்லாமல் வஸ்து விருக்க முடியாது. ஆனால் ஒரு இடத்தை அடைத்துக்கொண்டிருக்கிற ஒரு வஸ்து மிகக் குறுகி முன்னடைத்த விடத்தைவிடச் சிறிய இடத்தை அடைக்கலாம். எவ்வளவு குறுகியபோதிலும் அது இருப்பதற்கு மிகச் சொற்ப இடமாவது வேண்டும். ஒரு வஸ்து இருக்கும் இடம் முழுவதிலும் வேறொரு வஸ்துவை வைக்க முடியாது. சுரைக்காயளவு இடங்கொள்ளும் ஒரு வஸ்துவைச் சுண்டைக்காயளவு இடங்கொள்ளுமாறு குறுக்கி, சுரைக்காயளவா யிருந்தபோது கொண்ட இடத்தில் எஞ்சிய இடத்தை வேறொரு வஸ்துவை வைக்க ஒருகால் இயலுமேயன்றி, சுரைக்காயளவா யிருந்தபோது கொண்ட இட முழுவதையும் வேறொரு வஸ்துவால் நிரப்பமுடியாது. நிழல், காணப்படுவதேயாயினும், நிழலிருக்கும் இடம் முழுவதையும் எந்த வஸ்துவாலும் நிரப்பலாம். ஆகையால் நிழல் வஸ்துவன்று. கண்ணாடியில் காணும் பிரதிபிம்பம் ஒரு இடத்தில் இருப்பதாகத் தோற்றுகிறதேயன்றி அது காணப்படும் இடத்தில் உண்மையில் ஒன்றுமில்லை. நிழலும் பிரதிபிம்பமும் வஸ்துவல்லவானால் அவை தாம் யாவை? இவ்விஷயம் இந்நூலில் ஒளி என்ற தலைப்பின்கீழ் வரும் பாடங்களில் விளக்கப்படும்.

2. வஸ்துக்களுக்கு நிறை இருக்கின்றது:—திட திரவ வஸ்துக்களுக்கு நிறை அல்லது கனம் இருப்பது யாவருக்கும் தெரிந்த விஷயமே. வாயு வஸ்துக்களுக்கும் நிறை உளதோ எனச் சிலருக்குச் சங்கை எழலாம். ஒரு பரீட்சை செய்தால் அச்சங்கை நீங்கும். பாடசாலைச் சிறுவர்கள் விளையாடும் காலாலெற்றும் பந்தை, அதில் காற்றடைப்பதற்கு முன்னும் காற்றடைத்த பின்னும் ஒரு நுட்பமான தராசில் வைத்து நிறுத்தால், காற்றடைத்த பின்னர் அது அதிக நிறையுள்ளதாயிருக்கும். ஆகையால் வாயு வஸ்துக்களுக்கும் நிறையுண்டு.

3. வஸ்துக்கள் ஜடத்தன்மை வாய்ந்தன:—வஸ்துக்கள் தாமாகவே அசையா, யாதொரு சலனம் அல்லது மாறுபாடும் அடையா. இந்த லக்ஷணத்தை ஜடத்தன்மை என்கின்றோம். இதைப்பற்றி அடுத்த பாடத்தில் சற்று விரிவாய்க் கூறுவோம்.

பாரதி பக்தன்.

---

S42



# இலக்கியப் பகுதி.

## சீவக சிந்தாமணி.

(உ. கோவிந்தையா ரிலம்பகம்.)

17. கலையின தகலமுங் காட்சிக் கின்பமுஞ்
சிலையின தகலமும் வீணைச் செல்வமு
மலையினி னகலிய மார்ப னல்லதிவ்
வுலகினி லிலையென வொருவ னாயினான்.

சீவகன் இராசமாபுரத்தே இங்ஙனம் விளக்கமுற்றிருந்த காலத்து ஒரு நாள் அரசனது பசுக்கள் அடுத்துள்ள ஒரு மலையை யடைந்து மேய்ந்துகொண்டிருந்தன. அம்மலையிலுள்ள மிக்க வல்லமை பொருந்திய வேடுவர்களெல்லாம் ஒன்றுசேர்ந்து அப்பசு நிரையைக் கவர்ந்துகொள்ள ஆலோசித்தனர். அப்பொழுது அவர்களுள் நிமித்திகனாகிய ஒருவன் ஆந்தை அலறிய குரலின் குறிப்பை அவர்கட்குக் கூறுவானாயினான்.

"நாம் பசு நிரையைக் கொள்ளுவோம்; கொண்டபொழுதே அரசன் படை வந்து பொருது தோற்றுப்போம்; பின்னர் ஒருவன் தேரினால் நாமனைவரும் கெடுவோம்" என்று சொல்லுதலும், மற்றவர்கள் அவனை யிகழ்ந்து, "ஒருவன் கூற்றமேயென்று உலகம் கூறினும் அவ்வொருவன் ஒரு தேரால் ஒன்றும் செய்யமாட்டானாகலின், இன்று கொள்ளக்கடவேம், எழுந்திருமின்" என்று சொல்லி, நிரை நிற்கின்ற இடத்தை நோக்கிச் சென்று, அப் பசுக்களைப் புரக்கும் இடையர்களைத் தாக்கத் தொடங்கினர்.

---

17. ஞானமும் அழகும் வீரமும் காமமுமாகின்றான் சீவகன்; இவனல்லாது இவ்வுலகில் ஞான முதலியன இல்லையென்னும்படி தானொருவனே யாயினானென்க.

அரசற்குச் சிறந்தன இந் நான்கென்றார். இனிக் கலையினதகலம் – நாமகள்; காட்சிக்கின்பம் – வீற்றுத் தெய்வம்; சிலையினதகலம் – வீரமகள்; வீணைச்செல்வம் – மாதங்கி. இவர்கள் தாம் இவனல்லது வேறியாங்களென்றில்லை யென்னும்படி யாயினானென்றுமாம்.

S43



18. காய மீனெனக் கலந்து கானிரை
மேய வெந்தொழில் வேட ரார்த்துடன்
பாயு மாரிபோற் பகழி சிந்தினர்
ஆயர் மத்தெறி தயிரி னாகினர்.

வேடர் அம்புகளால் மத்தெறி தயிர்போற் சிதறிய ஆயர்கள் அவ் வேடர்களை ஒன்றும் செய்யமாட்டாது குழலுங் கோடாலியும் அங்கே கிடக்கக் காட்டைக் கழலப்போய், இடைச்சேரியில் தோள் முழுதும் தயிர்ப் புள்ளிசெறிந்த மகளிர் நின்று வருந்த, மறுகிச் சுழன்று விரைந் தோடிச் சென்று நகருட் புகுந்து கட்டியங்காரனை வணங்கி, "மறவர்கள் திரண்டு நமது பசு மந்தையைக் கவர்ந்துகொண்டனர்" என்று முறை யிட்டார்கள்.

அது கேட்டலும் கட்டியங்காரன் கண்களில் நெருப்புப் பொறி சிந்தச் சினங்கொண்டு, தன் புதல்வர் நூற்றுவரையும் மதனனையும் அழைத்து, "நீங்கள் படையோடு காற்றினும் விரைந்து சென்று வேடரை வென்று நிரையை மீட்பீராக" என்று அரிமானேறும் இடியும்போல அறைந்தனன். அரசன் கட்டளைப்படியே அவர்கள் கடலெனத் திரண்ட படையோடு சென்று போர்புரிந்து அவ் வேடராற் றோல்வியுற்று மீண் டனர்.

கடலுண்டந்தாற்போலும் அரசனது படை யுடைந்த வளவிலே ஆயர் கால்விசை யுண்டாகவோடி நமது படை யுடைந்ததென்று கூற, அதுகேட்டுக் கட்டியங்காரன் நெஞ்சிலே ஒரு வருத்தமுற்றிரங்கி அதிலே யழுந்தினான். பிறகு நிரைபோனபின் வந்த ஆயர் கட்டியங்காரனை நோக்கி,

19. வம்புகொண் டிருந்த மாதர் வனமுலை மாலைத் தேன்சோர்
கொம்புகொண் டன்ன நல்லார் கொழுங்கயற் றடங்கண் போலு
மம்புகொண் டரசர் மீண்டா ராக்கொண்டு மறவர் போனார்
செம்புகொண் டன்ன விஞ்சித் திருநகர்ச் செல்வ வென்றார்.

அது கேட்டு அரசன் ஒன்றுந் தோன்றப் பெறாஅய் வாளாவிருந் தனன்.

---

18. ஆகாயமு மீனு மென்னும்படி காட்டிலே கலந்து நிரை மேய்கிற அளவிலே வேடர் ஆர்த்துப் பரந்த மழைபோலப் பகழியை உடனே சிந்தினாராக, போரிற் காற்றாராய் ஆயர் மத்தாற் கடைந்த தயிர் போலச் சிதறினாரென்க.

19. நிரை போனபின் வந்த ஆயர், செல்வனே! மாலையினது தேனொழுகுவதோர் கொம்பு, கச்சைத் தன்னிடத்தே கொண்டு அடி

544



கட்டியங்காரன் சும்மாவிருப்பது கண்டு, அவ் விடையர் தலைவனாகிய நந்தகோன் வருத்தமுற்று, "இந் நிரை மீட்டுவரு மைந்தர்க்குப் பேரழகுள்ள என் கன்னியாகிய கோவிந்தையைத் தருவேன்" என்று தெருக்கள்தோறு முரசறைவித்தான். அது கேட்டும் வேடர்கூட்டத்துக் கஞ்சிப் பலரும் சும்மாவிருந்தனர்.

அதனை யுணர்ந்த சீவகன்,

20. தன்பான் மனையா ளயலான் றலைக்கண்டு பின்னு
மின்பா லடிசிற் கிவர்கின்ற கைப்பேடி போலா
நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா
ரென்பாரை யோம்பே னெனின்யா னவனாவ னென்றான்.

இங்ஙனம் சூளுரைத்துப் போர்க்கோலங்கொண்டு தோழர்களோடும் தேர்மேலேறிச் சென்று போர்புரிந்து, அவ் வேடர் ஐம்பத்தாறுயிரவரும் தனக்கு ஒருவாற்றானும் பகைவ ரன்மையின், அவர்களைக் கொல்லாது அச்சுறுத்தி நிரை மீட்டுவந்து நகர்க்குட் புகுந்தான்.

21. இன்னமிர் தனைய செவ்வா யிளங்கிளி மழலை யஞ்சொற்
பொன்னவிர் சுணங்கு பூத்த பொங்கிள முலையி னார்த
மின்னிவர் நுசுப்பு நோவ விடலையைக் காண வோடி
யன்னமு மயிலும் போல வணிநகர் வீதி கொண்டார்.

---

பரந்த காதலையுடைய முலையைத் தனக்குறுப்பாகக் கொண்டாற்போலும் நல்லாருடைய கண்போலத் தப்பாத அம்பையே தாங் கொண்டு அரசர் மீண்டார்; மறவர் ஆவைக்கொண்டே போனாரென்றா ரென்க.

அரசர் - அவன் புதல்வரும் மதனனும். செம்புகொண்டன்ன விஞ்சி — செம்பின் தன்மையைக் கொண்டாலொத்த மதில்.

20. நல்லொழுக்கம், பசு, துறந்தார், பெண்டிர், பாலர், பார்ப்பாரென்பாரை ஓம்பேனெனின் யான், தன் வீரத்தை அயலாரிடத்தே கண்டு பொறுத்தான் ஆண்மகனன்மையிற் பேடியை யொத்துப் பின்னும் பாலடிசி லுண்டற்கு மேற்கொள்கின்ற ஒழுக்கத்தையுடைய கட்டியங்கார னாவேனென்றா னென்க.

இது உட்கோள். இனிப் போலாமென மகா வீரரைக்கிப் பேடி போலாமவனாக வென்றுமாம். தன்பான் மனையாள் — தன் பகுதியாய்த் தங்கிய வீரமகள். போலாவென்ற பாடம் செய்யாவென்னு மெச்சப் பொருட்கண் வந்த உவமைச்சொல். நன்பால் — நல்லொழுக்கம்.

21. அமிர்தம்போன்ற செவ்வாயினையும் கிளிபோன்ற மழலைச் சொல்லையுமுடைய பொன்போலுஞ் சுணங்குபூத்த வளர்கின்ற இள

545



இங்ஙனம் வீதிகளிலும் மாடங்களிலும் செறிந்து நின்ற மகளிரும் மற்றவரும் களிகூரக் கண்டு வியந்து புகழுமாறு புலியேறுபோற் சென்ற சீவகன் தனது வீடு புகுந்து தாய் தந்தையர்க்கும் மற்றையர்க்கும் அளவில்லா மகிழ்ச்சி விளைவித்தனன்.

உடனே கோவிந்தனென்னும் பெயரிய நந்தகோன் அடங்கா மகிழ்வெய்திக் கந்துக்கடன் வீட்டிற்குச் சென்று சீவகனை நோக்கி, "பேரழகியாகிய எனது மகள் கோவிந்தையை நீ மணம்புரிதல் வேண்டும்.

22. குலநினைய னம்பி கொழுங்கயற்கண் வள்ளி
நலனுகர்ந்தா னன்றே நறுந்தார் முருகன்
நிலமகட்குக் கேள்வனு நீணிரைநப் பின்னை
யிலவலர்வா யின்னமிர்த மெய்தின னன்றே."

என்று வேண்டிக்கொள்ளுதலும், சீவகன், அவன் மகளைத் தான் அப்பொழுது மணஞ்செய்தல் தன் குலத்திற்குப் பொருந்தாதென் றெண்ணி, நந்தகோனுக்குப் பல இனிய மொழிகள்கூறி, தன் தோழனாகிய பதுமுகனுக்கு அவளை மணஞ்செய்வித்தான்.

கோவிந்தைக்குப் பசு இரண்டாயிரமும் பொற்பாவை யேழுங் கொடுத்து நந்தகோன் போக, இவ்விடத்தே பதுமுகனைக் காமன் சேனை வருத்திற்று. அவ்வளவிலே அவனம்பு தைத்தலாலே ஆற்றானாய் முலைச் சிகரங்களுக்கு நடுவே முத்துக வீழ்ந்து முயங்கினா னென்க.

---

முலையினார், சீவகனைக் காண்பதாக நுசுப்பு நோவ ஓடி, அன்னமு மயிலு நின்றாற்போல நகரிற் றெருவைக் கைக்கொண்டு நின்றா ரென்க.

இது கற்புடை மகளி ரொழிந்தோரைக் கூறிற்று.

22. நம்பி! யாமறிய முருகன் வள்ளிநலம் நுகர்ந்தானன்றே, திருமால் பின்னையைப் புணர்ந்தானன்றே, ஆதலால் குலத்திற் றாழ்வு கருதாதொழிக வென்றானென்க.

நப்பின்னை — அவள் பெயர். ந — சிறப்புப்பொரு ளுணர்த்துவதோ ரிடைச்சொல். நப்பாலத்தன், நக்கீரன் என்றாற்போல. நம்பின்னை — விகாரமுமாம்.

S46



23. தீம்பாற் கடலைத் திரைபொங்கக் கடைந்து தேவர்
தாம்பாற் படுத்த வமிர்தோ தடமாலை வேய்த்தோ
ளாம்பாற் குடவர் மகளோவென் றரிவை நைய
வோம்பா வொழுக்கத் துணர் வொன்றில னுயினனே.

கோவிந்தையா ரிலம்பகம் முற்றிற்று.

பத்திராதிபர்.

---

# சாத்திரப் பகுதி.

---

## சன்மார்க்கம்.

---

(தொடர்ச்சி.)

இம்மட்டோ! இவ் வொழுக்கங்களிற் றவறுறுவோருக்கு மிகுதியான தண்டமுங் கூறுதலானும், இவை முற்று மிச்சமயத்துளடங்குதலானும், இந் நெறி சன்மார்க்க மென்பது ஒருதலை. இன்னும், சன்மார்க்க மென்னுஞ் சொற்கு, சத்தை யறிதற்குரிய மார்க்க மென்று பொருள் கோடலுமொன்று. சத்து என்னுஞ் சொற்குப் பொருள் சிவம். இது சிவமென்னும் பொருளை எங்ஙன முணர்த்துமெனின், "சத்தே முதற்கண் இருந்தது" என்று சாந்தோக்கிய உபநிடதமும், அதனை விளக்கமாக "நான் ஒருவனே முதற்கண் இருந்தனன்" என்று அதர்வசிரசில் உருத்திர வசனமும், "உருத்திரனுகிய சத்து" என்று கண்டோக்தியாக மகோப நிடதமும் விளக்குகின்றமையானும், பிறவற்றுனும் சத்து என்னுஞ் சொல் சிவபெருமானையே உணர்த்து மென்பது தெளிவாம். இத்

---

23. இவள் தேவர் கடலைக் கடைந்து தம்மிடத்தே அகப்படுத்த அமுதமோ! அன்றி அழகிய பாலையுடைய இடையர் மகளோ! என்று நயப்புரைத்துப் பின்னும் பரிகரிக்க வொண்ணுத புணர்ச்சி யொழுக்கத்திலே மாலையினையும் தோளினையுமுடைய அரிவை அவசமாகத் தானும் அறிவு மயங்கினனென்க.

தாம், ஆம்பால் இரண்டும் விகாரம். இனி ஆம்பால் — பெரும்பாலுமாம்.

தெளிவினுற் சத்தென்பது சிவனையுணர்த்தலானும், சிவனைக் காட்டும் மார்க்கம் சைவ மாதலானும் சைவ சமயமே சன்மார்க்க மென்பது நிச்சயிக்கப்பட்ட தொன்ரும். இனி, இச் சமய சாத்திரங்கள் ஆன்மாக்களின் பக்குவம் நோக்கி, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை மார்க்கங்களை வகுத்துக் கூறி, அந்நெறிகளி னின்ருேர்க்கு முறையே சாலோக சாமீப சாரூபங்களாகிய அபரமுக்தியும், சாயுச்சியமாகிய பரமுக்தியும் சித்திக்குமெனக் கூரு நிற்கும். இதற்குப் பிரமாணம்:

சிவஞானசித்தியார்.

தாதமார்க் கஞ்சாற்றிற் சங்கரன் றன் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந்தார் மாலை கண்ணி
புனிதற்குப் பலசாத்திப் புகழ்ந்து பாடித்
தீதிறு விளக்கிட்டுத் திருநந்த வனமுஞ்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியு
மியற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர்.

புத்திரமார்க் கம்புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினு லர்ச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினெடு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்க
ணின்மலன்ற னருகிருப்பர் நிகழ்த்துங் காலே.

சகமார்க்கம் புலனெடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
சலிப்பற்று முச்சதுர முதலாதா ரங்க
ளகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடல முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக வினைக
ளுகமார்க்க வட்டாங்க யோக முற்று
முழத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்.

சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்க டாம்பலவு முணர்ந்து

548



பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம்
பதிபசுபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டு
நன்மார்க்க ஞானத்தா னடி ஞான
ஞேயமொடு ஞாதிருவு நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
பெருமையுடை யோர்சிவனைப் பெறுவர் காணே.

இந் நால்வகை மார்க்கங்களுள் நான்காவதாகிய ஞானத்தை எய்தியே யொருவன் முக்தி பெறவேண்டுமாயினும் அந்நெறியிற் பரம்பரையாகக் கொண்டு செலுத்தற்குக் கீழுள்ள மூன்றுஞ் சாதனமாக இருத்தலான், அவை யெல்லாம் முக்தி மார்க்கங்களென்றே கூறப்படுவனவாம். இனி, நாம் ஒவ்வொருவரும் அவரவர்களுக் கேற்ப ஒரு நெறியில் நின்று இகபர சுகங்களைப் பெற்றுய்யுமாறு எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளின் பொற்பாத கமலங்களை மனம், வாக்கு, காயங்களாற் சிந்தித்து வந்தித்து வணங்குவோமாக. நம: பார்வதீபதயே. நண்பர்களே, யான் இதுகாறுங் கூறியவாற்றால் பல் பிறப்பினும் மக்கட் பிறப்பே மேலாய தென்பதூஉம், அரிதிற் கிடைக்கப்பெற்ற அப்பிறப்பையுடையார் முடிவில் எய்தற்பாலது வீட்டின்பமேயாம் என்பதூஉம், அந்நிலையை அடைதற்குரிய மார்க்கங்கள் பல இருப்பினும் சைவ சித்தாந்தமே விழுமிய தொரு நன்மார்க்கமாம் என்பதூஉம், அதுவே சன்மார்க்கம் என்பதூஉம், சன்மார்க்கத்திற்கு எல்லா மதங்களும் சம்மதமென்பதூஉம், ஆன்மாக்களின் பக்குவம் நோக்கி நான்கு பிரிவாகப் பிரிக்கப்பெற்றிருக்கின்றதென்பதூஉம், நாம் ஒவ்வொருவரும் நமக்கான ஓர் நெறியில் நின்று உய்யவேண்டும் என்பதூஉம் பிறவும் விளக்கப்பட்ட பொருள்களாம்.

போ. மாணிக்கசெட்டியார்,

தாதம்பேட்டை பழூர்.

---

## குருபக்தி.

(தொடர்ச்சி.)

இதைக் கேட்ட அறிவில் முதிர்ந்த விளையோன், "ஓ ஓ! நான் இவனுடன் தர்க்கம் செய்துகொண்டிருக்க இது சமயமல்ல. படகு புறப்பட்டுவிடும். இச்சமயம் தப்பினால் எச்சமயம் மறுபடி இக்கரைக்கு அது திரும்புமோ. நான் இப்பொழுது போகாவிடில் நாளை என் தாயை உயிருடன் காண்பேனென்பது நிச்சயமுமில்லை. ஆதலால் இவனை உட

னழைத்துப் போகவேண்டுமென்ற எண்ணத்தை விடுத்து, நான் கரை சேரும் மார்க்கத்தைத் தேடுவேன்'' என நினைந்து, தன் சகோதரனை விடுத்து அப்பொழுதே புறப்படத் தயாராயிருந்த படகில் ஏறி விரைவில் அக்கரை சேர்ந்தான். அன்னையை யடைந்தான். அகமகிழ்ந்தான்.

மற்றவனோ, படகைக் கண்டதும் காதவழி தூரம் ஓடிப் பின்பு, "கடவுள் கிருபையால் நான் தப்பினேன். என் சகோதரனோ அநியாய மாய் ஓடக்காரன் பேச்சைக் கேட்டுக் கெட்டுப்போய்விட்டான். அவனை இனி எங்குக் காண்பேன்'' என்று அவனுக்காக விம்மி விம்மி யழுது புரண்டு, படகு கண்ணுக்குத் தெரியும் வரையில் அங்கிருந்து, பிறகு கரையோரம் வந்து தான் கரைசேரும் மார்க்கத்தை யாலோசிக்கையில், அவ்வாற்றோரம் ஓர் நீண்ட வஸ்து மரம்போல் மிதந்துகொண்டிருக்க அதைக் கண்டு உளமகிழ்ந்து, "இதோ மிதக்கும் தவணைக்கட்டையில் ஏறி என் சாமர்த்தியத்தால் அக்கரை சேருவேன். வல்லவனுக்குப் புல்லு மோர் ஆயுதமன்றோ'' என்றெண்ணி அதில் ஏறினான். அது ஓர் முதலை. வெயில் காய்வதற்குக் கரையோரம் வந்திருந்தது. அதன் முதுகில் பாரம் உறைக்கவே, நடு ஆற்றிற்கு ஓடிற்று. அப்பொழுது இம் மூடன் தன் பிரயத்தனமில்லாமலே தான் போகவேண்டியவிடம் செல்கின்ற அது ஆபத்துக்காலத்தில் தனக்குக் கடவுளால் அருளப்பட்ட ஓர் யந்திரமாகத் தா னிருக்கவேண்டுமென்று குதூகலித்து ஆரவாரித்தான். உடனே முதலை, தனக்கு மனிதனால் ஆபத்து உற்றதா யெண்ணிச் சரேலெனத் தண்ணீரில் மூழ்கிச் சென்றது. பரிதாபம்! அதன்மேல் ஏறிச் சவாரி செய்தவன் கதியென்னவென்று நாம் சொல்லவும் வேண்டுமோ?

இச்சிறு கதையால்: வேதமே ஓடம்; அதைக்கொண்ட உத்த மனே ஓடக்காரன்; அன்னவன் தான் கரையேறிச் செல்லும் நினைவினை யொழித்து இங்கு மங்கு மல்லாடுவது நம்போலிய பேதைகளைக் கரை யேற்றுவதற்கே. விவேகியாயுள்ள பிரயாணி எவ்வாறு ஓடத்தின் வெளிப் பகட்டையும், ஓடக்காரனின் தாழ்மையையும் குறிக்கொள்ளாது, அவ் வோடம் மாத்திரம் துவாரங்களில்லாது உறுதியானதாவென் றறிந்து கொண்டு, தான் போகவேண்டியதைக் குறியாகக்கொண்டு, ஆறு கடத் தற்கு வேண்டிய கூலிகொடுத்து அக்கரை சேர்ந்தவுடன், ஓடம், ஓடக் காரன், ஆறு முதலிய யாவையும் விடுத்துத் தன் லக்ஷியத்திற் செல்வனோ, அவ்வாறே, ஒவ்வொரு முமுக்ஷுவும் தானடையும் குருவும், அவரது உப தேசமும், சுருதி யுக்தி யனுபவங்களுக்குப் பொருத்தமாயுளதா என்று மாத்திரம் ஆராய்ந் தறிந்து, மற்றப்படி, அக்குருவின் குண விசேஷங்களை யும் மற்றுமுள்ள குற்றங்களையும் ஆராய்வதில் காலத்தைப் போக்காமல்

"குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை" என்று தேறி, தன் லக்ஷியமாகிய வித்தையில் கவனம்வைத்து, சிசுருஷாதிகளால் குருவைச் சந்தோஷிப்பித்து, தான் இலகுவாய் இச்சம்சார வெள்ளத்தைத் தாண்டிச் செல்வான். மூடனோ, நல்லோரை அவர்கள் சுலபத்தன்மையால் தீயோராக மதித்து, தீயோரை அவர்கள் வெளிப்பகட்டால் மயங்கி "..........நுனி நீக்கித் தூறிற்றின் றன்னதகைத்தரோ பண்பிலா ஈரமிலாளர் தொடர்பு" என்பதை யறியாமல் அவர்களின் உபதேச வழிச்சென்று மீளாத இச்சம்சார வெள்ளத்தி லமிழ்வன்.

இனி, சற்குருவைத் தேர்ந்து அடையும் வேட்கையால், அன்னோரின் இயல்பையும், சிஷ்யர்களுடன் அவர்களுக்குள்ள சம்பந்தத்தினையும், அத்தகைய குருக்களின் கருணைக்குப் பாத்திரமான அதிகாரிகளையும் சற்று ஆராய்வோம்.

குரு சீடர்கள், 1. மர்க்கட நியாயம், 2. சங்கம நியாயம், 3. மார்ஜ்ஜால நியாயத்திற்கிணங்க மூன்றுவிதமாக உலகிற் காணப்படுகின்றனர்.

1. ஒரு குரங்குக்குட்டியானது தன் தாய் தன்னை லக்ஷியஞ்செய்யாமல் எவ்வளவு முறட்டுத்தனமாய் மரத்தின் கிளைக்குக்கிளை தாவின போதிலும், தான் பிடித்த பிடியை விடாமல், தாயின் முகத்தையே பார்த்துக்கொண்டும், அது எப்படித் தாவுகிறதென்றும், எப்படிப் பழங்களையும் காய்களையும் பறிக்கின்றதென்றும், தன் பிறவிக்குரிய மற்றுமுள்ள பழக்கங்களையும் தானே சிரமப்பட்டுப் பார்த்துப் பார்த்துப் பழகிக் கற்றுக்கொள்வதுபோல், சில குருமார்கள் சீடர்களைக் கவனியாது தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளை மட்டும் அவர்களைக்கொண்டு செய்வித்துச் சுகித்திருப்பார்கள். அவர்களிடம் பக்தியுடைய சீடர்களோ தங்கள் குரு, கடுகடுத்துப் பேசித் தங்களைத் துரத்தினாலும், அவரை விட்டு நீங்காமல் சிசுருஷாதிகளைக் குறைவறச் செய்துகொண்டு, தங்கள் குருவோடு சல்லாபங்கள் செய்ய வரக்கூடிய பல விவேகிகளின் வசனங்களைப் பலநாட் கேட்பதாலும், ஒழிந்த நேரங்களில் தம் குருவினு லளிக்கப்பட்ட புஸ்தகங்களைப் படிப்பதினாலும், தம் குருவின் வாயிலிருந்து எப்போதாகிலும் வரக்கூடிய உபதேச மொழிகளினாலும் நாளடைவில் விவேகத்தை யடைந்து தங்கள் விடா முயற்சியினால் மேன்மையை யடைவார்கள். இச் சீடர்கள் உத்தமராவர். இத்தகைய குரு சீட சம்பந்தம் மர்க்கட நியாயமுடைத்து.

(தொடரும்.)

M. V. சுப்ரமண்ய ஐயர்.

# சுஜன சம்வாதம்.

## விவேகி யார்?

(முன் 143-வது பக்கத் தொடர்ச்சி.)

**சத்சிதா.** நண்ப, நீ சொல்வது சுருதி, யுக்தி, ஆன்றோர் அநுபவம் என்னும் இவை மூன்றிற்கும் விரோதமாகின்றதே.

**பிரபு.** ஆப்த, ஆ! இதென்ன ஆச்சரியம். நான் கூறியது எங்ஙனம் விருத்தம்?

**சச்சிதா.** நண்ப, கேட்பாயாக; "பிரமத்தைவிடப் பின்னமான ஸர்வப் பிரபஞ்சமும் மித்தை" "இச் சர்வப்பிரபஞ்சமும் மாயா மாத்திரம் (மித்தை)" "ஈண்டு நாநாவென்பது அற்பமு மில்லை." "இவை யாவும் பிரமமே." என்பதாதி சுருதிகளனைத்திற்கும் நீ சொன்ன சத்திய விலக்கணம் விரோதமாகின்றதென்று ஸ்பஷ்டமாக ஏற்படுகின்றது.

**பிரபு.** ஆப்த, நான்கூறிய சத்திய விலக்கணத்திற்கும் இப்போதெடுத்துக் காட்டப்பட்ட சுருதிகட்கும் எங்ஙனம் விரோதமாம்.

**சச்சிதா.** "காணப்பட்டது மெய்" எனச் சத்தியத்திற்கு இலக்கணங் கூறின் தேகாதிப் பிரபஞ்சங்க ளனைத்தும் காணப்படுகின்றனவாதலின் அவை சத்தியமாகவன்றோ ஆதல் வேண்டும். அங்ஙனமாமேல் மேல் தெரித்துணர்த்தப்பட்ட சுருதிகளனைத்திற்கும் விருத்தம்வரும் என்பதைப்பற்றிக் கேட்கவும் வேண்டுமோ.

**பிரபு.** சுருதிகட்கு விருத்தம் வருகின்றதை நான் நன்றாக உணர்ந்தேன். ஆயினும் யுக்திக்கு விரோதமாதல் யாங்ஙனம்?

**சச்சிதா.** நண்ப, கவனிப்பாய்; காரியங்க ளனைத்தும் காரணத்தினும் அபின்னமே. அதாவது: மண்ணின் காரியங்களான கடாதிகள், பொன்னின் காரியங்களான கடக குண்டலாதிகள் முறையே மண்ணினும் பொன்னினும் பின்னமாயின்றாதல்போன்று பிரமத்தின் காரியமான பிரபஞ்சம் பிரமத்தினும் பின்னமன்று, அபின்னமேயாம். இவ்வுத்தியால் பிரபஞ்சம் யாவும் மித்தையென் றேற்பட்டன. அன்றியும் யாது யாது காணப்படுவதோ அது அது மித்தையென்பது துணிபு. சுத்திரஜதம்,

552



கயிற்றரவுபோல. இதனாலும் காணப்படுவது மெய்யன்று. காணப்படுவது பொய்யேயென்று துணியப்பட்டது.

பிரபு. ஆப்த, இதுகாறும் சுருதிக்கும் யுக்திக்கும் யான் கூறிய சத்திய விலக்கணம் பொருந்துமாறுவகையை யுணர்ந்தேன். இனி ஆன்றோர் அநுபவத்திற்குப் பொருந்தாமையையும் விளக்க வேண்டுகின்றேன்.

சச்சிதா. நண்ப, சாவதானமாய்க் கேட்பாயாக.

“ எந்தைநின் திருவளர்நாட்டங்கருணையிற்பெறலும்
யாவையும்எனக்குப்பொய்யெனத்தோன்றி
மேவருநீயேமெய்யெனத்தோன்றினை
ஓவியப்புலவன்சாயல்பெறவெழுதிய
சிற்பவிகற்பமெல்லாம்
ஒன்றிற்றவிராதுதடவினர்தமக்குச்
சுவராய்த்தோற்றுந்துணிவுபோன்றனவே. ”

என்னும் நம் பட்டினத்தடிகள் வாக்கியத்திற்கும்,

“ இந்திரசாலங்கனவுகானனீரென
இவ்வுலகமெமக்குத்தோன்ற ”

“ அண்டபகிரண்டமுமாயாவிகாரமே
அம்மாயையில்லாமையே ”

“ பாராதியண்டமெலாம்படர்கானற்சலம்போல் ”

என்னும் நமது தாயுமானர் வாக்கியத்திற்கும்,

“ எங்குஞ் சிவமொழிய வில்லையலன் றன்னுணை
அங்கந் திரள்கருவி யாணவமாம்—பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய். ”

என்னும் சிவாநந்த மாலையிலுள்ள வாக்கியத்திற்கும் உனது சத்திய விலக்கணம் பொருந்தாமை யறிக. அன்றியும் “ கண்ணினாற் கண்டதும் பொய், காதினாற் கேட்டதும் பொய், தீர விசாரித்துணர்ந்தது மெய் ” என்னும் லோகோக்தியையுங் கவனிப்பாயாக.

ஆ. செங்கல்வராயமுதலியார்,

காஞ்சீபுரம்.

---